# ஹிரண்மயி

வங்க மூலம்

பங்கிம் சந்த்ர சட்டர்ஜி

தமிழாக்கம்

கு.ப.ரா.

## முதல் அத்தியாயம்

## பிரிவு

உத்தியானவனத்தில் நடுவிலிருந்த கொடி வீட்டில் இருவர் நின்று கொண்டிருந்தார்கள். அவ்விடத்தில் பிராசீனமான நகரமாகிய தாமரலிப்தத்தின் பாதத்தை நீலக்கடல் அலைகொண்டு கழுவி மெதுவான முழக்கம் செய்து கொண்டிருந்தது.

தாமரலிப்த நகரத்தின் ஓர் ஓரத்தில், கடற்கரையில் அழகிய மாளிகை ஒன்று இருந்தது. அதனருகே நேர்த்தியாக நிர்மாணம் செய்யப்பட்ட தோப்பு ஒன்று உண்டு. அது தனதாஸர் என்ற சிரேஷ்டி (செட்டி)க்குச் சொந்தமானது. செட்டியினுடைய பெண்ணாகிய ஹிரண்மயி என்பவள் தான் அந்த லதா மண்டபத்தில் ஒரு வாலிபனுடன் பேசிக்கொண்டு இருந்தாள்.

ஹிரண்மயி விவாகம் ஆகவேண்டிய பருவத்தையும் தாண்டினவள். மனத்திற்கு உகந்த புருஷனைப் பெறுவதற்காக அவள், பதினோராவது வயது முதல் அதுவரை, ஐந்து வருஷங்களாக, அந்தக் கடற்கரையில் கோயில் கொண்டு எழுந்தருளியிருந்த ஸாகரேசுவரி என்ற அம்பிகைக்குப் பூஜை செய்து வந்தாள். ஆனால் அவளது மனோரதம் மட்டும் ஈடேறவில்லை.

வயதுவந்த ஒரு யுவதி எதற்காகத் தனியே ஒரு யௌவன புருஷனுடன் பேசிக்கொண்டிருந்தாள் என்பது எல்லோருக்கும் தெரிந்த விஷயந்தானே! ஹிரண்மயிக்கு நாலு வயதான பொழுது, அந்த வாலிபனுக்கு வயது எட்டு. அவனுடைய தகப்பனாராகிய சசீஸுத செட்டி தனதாஸருக்கு அடுத்த வீட்டுக்காரர். ஆகையால் குழந்தைகள் இரண்டும் ஒரே இடத்தில் சேர்ந்து விளையாடினவை

இப்பொழுது ஹிரண்மயிக்கு வயது பதினாறு; வாலிபனுக்கு வயது இருபது. இருந்தாலும், இருவரும் பழைய பாலிய சிநேக சம்பந்தந்தான் கொண்டிருந்தார்கள். நடுவில் ஓர் இடையூறு ஏற்பட்டது. விவாக காலம் வந்ததும் இருவருடைய தகப்பனார்களும் சேர்ந்து கலியாணம் செய்வதாகத் தீர்மானித்தார்கள். முகூர்த்தங்கூட வைத்தாகிவிட்டது. இருந்தாற்போலிருந்து திடீரென்று ஹிரண்மயியின் தகப்பனார், நான் பெண்ணைக் கொடுக்க மாட்டேன் என்று சொல்லி விட்டார். அது முதல் ஹிரண்மயி புரந்தரனைச் சந்திப்பதே கிடையாது. அன்று அநேகப் பிரயத்தனங்கள் செய்து, முக்கியமான விஷயம் ஒன்று பேச வேண்டுமென்று அவன் ஹிரண்மயியை அங்கே வருவித்திருந்தான்.

லதா மண்டபத்திற்கு வந்தவுடன் ஹிரண்மயி புரந்தரனைப் பார்த்து, "என்னை ஏன் கூப்பிட்டாய்? இப்பொழுது நான் சிறு பெண் அல்லவே? இங்கே நான் உன்னுடன் தனியாக இருப்பது நன்றாக இராது. ஆகையால் மறுபடியும் கூப்பிட்டால் நான் வரமாட்டேன்" என்றாள்.

பதினாறு வயது மங்கை, நான் சிறு பெண் அல்ல! என்று சொன்னது மிகவும் நன்றாக இருந்தது பார்ப்பதற்கு; ஆனால் அந்த ரஸத்தை அனுபவிக்கக் கூடியவர்கள் அங்கே யாரும் இல்லை. புரந்தரனுடைய வயதும், மனோநிலையும் அதை அனுபவிப்பதற்குரிய சக்தியற்றிருந்தன.

புரந்தரன் மண்டபத்திலிருந்து தொங்கிய ஒரு கொடியிலிருந்து ஒரு பூவைப் பறித்து அதை உதிர்த்துக் கொண்டே, "நான் உன்னை இனிமேல் இங்கே கூப்பிடப் போவதில்லை. நான் தூரதேசத்திற்குப் போகிறேன். இதை உன்னிடம் சொல்லிவிட்டுப் போகத்தான் வந்திருக்கிறேன்" என்றான்.

"தூரதேசமா? எங்கே?" என்று கேட்டாள் ஹிரண்மயி.

"சிங்களம்!"

"சிங்களமா? அங்கே என்ன? எதற்காக அங்கே போகவேண்டும்?" என்று ஹிரண்மயி கொஞ்சம் ஆச்சர்யத்துடன் கேட்டாள்.

"ஏன் போக வேண்டுமா? நான் செட்டி; வியாபாரத்திற்காகப் போகவேண்டும்" என்று புரந்தரன் சொன்னான்; அப்படிச் சொல்லும் பொழுதே அவனுடைய அழகிய கண்கள் கலங்கின.

ஹிரண்மயி சஞ்சலமடைந்தாள். அவள் ஒன்றும் பேசவில்லை; கண்கொட்டவும் இல்லை. எதிரே கடல் அலையில் காலைச் சூரியனின் கிரணம் விளையாடுவதைப் பார்த்தபடியே இருந்தாள். காலை வேளை; மிருதுவான காற்று வந்துகொண்டு இருந்தது. அந்தக் காற்றால் கிளம்பி அவ்வளவு உயரமாக எழும்பாத சிறு அலைகளின்மேல் அருண கிரணம் ஏறிச் சஞ்சலித்துக் கொண்டிருந்தது. அதனுடைய முடிவற்ற ரேகை ஒரு ஜ்வாலைபோல நீளச் சென்றது. கறுத்த மேனியுடைய பெண்மீது வெள்ளி ஆபரணங்கள் போட்டது போலக் கடலில் நுரை பிரகாசித்தது கரையில் கடற்பறவைகள் வெண் கோடிட்டது போலப் பறந்து போய்க் கொண்டு இருந்தன.

ஹிரண்மயி எல்லாவற்றையும் கண்டாள். நீல நீரைக் கண்டாள்; அலைச்சிரங்களில் நுரை மாலையைக் கண்டாள்; சூரிய கிரணத்தின் விளையாட்டைக் கண்டாள்; நீல ஆகாயத்தில் கறுப்புப் பொட்டுப்போல ஒரு பட்சி பறந்து போவதையும் கண்டாள். கடைசியில் கீழே கிடந்த ஓர் உலர்ந்த பூவைப் பார்த்துக் கொண்டே, "நீ ஏன் போகவேண்டும்? இதற்கு முன்னாலெல்லாம் உன் தகப்பனார் அல்லவா போய்க் கொண்டிருந்தார்?" என்று புரந்தரனைக் கேட்டாள்.

"என் தகப்பனாருக்கு வயதாகிவிட்டது. இப்போது அவர் கிழவர் ஆகிவிட்டார். நான் அங்கே போய் வியாபாரம் செய்து ஐசுவர்ய சம்பாத்தியம் செய்ய வேண்டிய காலம் வந்துவிட்டது. நான் என் பிதாவிடம் அங்கே செல்லுவதாக அனுமதி பெற்று விட்டேன்".

ஹிரண்மயி லதா மண்டபத்தின் ஒரு கட்டைமேல் நெற்றியை அழுத்திக்கொண்டாள் அவளுடைய நெற்றி சுருங்கியிருந்ததையும், உதடு துடிப்பதையும், நாசி விரிந்திருப்பதையும் புரந்தரன் கண்டான். ஹிரண்மயி அழும் தறுவாயிலிருந்தாள்.

புரந்தரன் தன் முகத்தைத் திருப்பிக் கொண்டான். அவனும் ஆகாயத்தையும் பூமியையும், ஊரையும், கடலையும் பார்த்தான். ஆனால் ஒன்றிலும் அவன் மனது நிற்கவில்லை. கண்களில் ஜலம் வடிந்தது. புரந்தரன் கண்களைத் துடைத்துக் கொண்டான். "இதைச் சொல்வதற்காகத்தான் இங்கே வந்தேன். உன் தகப்பனார் உன்னை எனக்கு மணம் செய்து கொடுப்பதில்லையென்று சொன்னநாள் முதலே நான் சிங்களத்திற்குப் போய்விடுவதென்று தீர்மானித்து விட்டேன். இனிமேல் சிங்களத்திலிருந்து திரும்பி வருவதில்லை என்று எண்ணிக் கொண்டிருக்கிறேன். உன்னை நான் மறந்து விட்டால், ஒரு வேளை திரும்புவேன். என்கு அதிகம் சொல்லத் தெரியவில்லை. அதிகம் சொன்னால் நீயும் புரிந்து கொள்ள மாட்டாய். ஆனால் ஒன்று சொல்லுகிறேன். அது உனக்கு அர்த்தமாகலாம். ஜகத்தெல்லாம் ஒரு பக்கம், நீ ஒரு பக்கம் எனக்கு. என்றும் அது உனக்கு ஈடாகாது என் மனத்தில்" என்று சொல்லிவிட்டு அவன் திடீரென்று திரும்பி வேறொரு மரத்தின் பின்னால் போய் நின்றான் கண்ணீர் வேகம் கொஞ்சம் குறைந்ததும் திரும்பிவந்து மறுபடியும், "உனக்கு என்மேல் பிரியம் இருக்கிறதென்று எனக்குத் தெரியும். ஆனால் எப்படியும் நீ வேறொருவனுடைய மனைவி ஆகவேண்டும். ஆகையால் நீ இனிமேல் என்னைப் பற்றி நினைக்காதே. இனிமேல் இந்த ஜன்மத்தில் உனக்கும் எனக்கும் சந்திப்பு ஏற்படாது" என்றான்.

இப்படிச் சொல்லிவிட்டுப் புரந்தரன் உடனே வெளியே போகப் புறப்பட்டான். ஹிரண்மயி அழ ஆரம்பித்தாள்.

பிறகு ஒருவாறு அழுகையை நிறுத்திக் கொண்டு, "நான் செத்துப் போய்விட்டால், புரந்தரன் எப்படிச் சிங்களம் போவான்? நான் ஏதாவது ஒரு கொடியைக் கழுத்தில் இறுக்கிக் கொண்டு சாகட்டுமா? சமுத்திரத்தில் விழுந்து விடட்டுமா? ஆனால் நான் இறந்துபோய் விட்டால், புரந்தரன் சிங்களம் போனால் என்ன? போகாவிட்டால் என்ன?" என்று இந்த மாதிரியாக யோசித்துக் கொண்டு ஹிரண்மயி உட்கார்ந்து அழுதாள்.

## இரண்டாம் அத்தியாயம்

## பாதிக் கடித மர்மம்

புரந்தரனுக்கு நான் ஹிரண்மயியைக் கொடுக்க மாட்டேன் என்று தனதாஸர் எதற்காகச் சொன்னார் என்பது யாருக்கும் தெரியாது. அதைப்பற்றி அவர் யாரிடமும் ஒன்றும் வெளியிட்டுச் சொல்லவில்லை. அதற்குத் தக்க காரணம் இருக்கிறது என்று மட்டும் சொல்லிக் கொண்டிருந்தார். இன்னும் அநேக வரன்கள் வந்தன. ஆனால் தனதாஸர் ஒன்றுக்கேனும் சம்மதம் கொடுக்கவில்லை. கலியாணம் என்ற பேச்சையே அவர் காதில் போட்டுக் கொள்ளவில்லை. 'குழந்தை பெரியவளாகி விட்டாளே!' என்று மனைவி சொன்னதையும் கேட்கவில்லை. "குருதேவர் வரட்டும்; அவர் வந்த பிறகுதான் மேற்கொண்டு யோசனை செய்யவேண்டும்" என்று சொல்லிவிட்டார்.

புரந்தரன் சிங்களத்திற்குப் போய்விட்டான். அவன் சிங்களம் சென்று இரண்டு வருஷம் இவ்வாறு கழிந்தன. அவன் திருமபி வரவில்லை. ஹிரண்மயிக்கும் கலியாணம் ஆகவில்லை. அவள் பதினெட்டு வயது மங்கையாகி உத்தியான வனத்தின் நடுவே புதுத்தளிர் விட்டு நிற்கும் மாமரம் போலத் தனதாஸர் வீட்டில் சோபித்துக் கொண்டிருந்தாள்.

ஹிரண்மயி அதனால் வருத்தமடையாமலில்லை. விவாகப் பேச்சு வந்தால் புரந்தரன் ஞாபகந்தான் வந்தது அவளுக்கு. அவனுடைய சிரித்த முகம் அவள் முன் வந்து நின்றது; நிலச் சரிகை வேஷ்டியணிந்த அவனுடைய தோள்கள் நினைவிற்கு வந்தன. வைரமோதிரம் அணிந்த கைகளை அவள் தன் மனக்கண்முன் பார்த்தாள். அப்பொழுதுன் அவள் அழுதாள். தந்தையாரின் இஷ்டப்படி அவள் யாரையாவது தான் மணக்க வேண்டியிருக்கும். ஆனால் அவள் அதன் பிறகு உயிருடன் இருந்தும் இறந்தவளானாள். விவாகத்தைப் பற்றியே தந்தையார் பேச்செடுக்காததைக் கண்டு அவள் சந்தோஷப்பட்டாளோ படவில்லையோ; ஆச்சரியப்பட்டாள். அவ்வளவு வயதுவரை யாரும் பெண்ணைக் கலியாணம் செய்து கொடுக்காமல் வைத்துக் கொண்டிருக்கவே மாட்டார்கள்; அப்படி வைத்துக் கொண்டிருந்தாலும் கட்டாயம் கலியாணப் பேச்சையாவது பேசி நிச்சயம் செய்து வைத்திருப்பார்கள். அவளுடைய தந்தையார் ஏன் அந்தப் பேச்சைக் காதில் கூடப் போட்டுக் கொள்ளாமல் இருந்தார்? ஒரு நாள் அகஸ்மாத்தாக அந்த விஷயத்தில் அவளுக்குக் கொஞ்சம் விவரம் கிடைத்தது.

தனதாஸர் வியாபாரம் நடத்திக் கொண்டிருக்கையில் ஒரு விசித்திரமான சீன தேசத்துப் பெட்டி கிடைத்தது பெட்டி மிகவும் பெரியது.தனதாஸரின் மனைவி தன் நகைகளை அதில்தான் வைத்துக் கொண்டிருந்தாள். கொஞ்ச காலத்திற்குப் பிறகு தனதாஸர் மனைவிக்குப் புதிய நகைகள் செய்து கொடுத்தார். அவள் தன் பழைய நகைகளைப் பெட்டியோடு பெண்ணிற்குக் கொடுத்துவிட்டாள். ஹிரண்மயி அந்த நகைகளை வெளியில் எடுத்துத் துடைத்து வைக்கும் பொழுது பெட்டியில் ஒரு பக்கத்தில் கிழிந்த லிகிதம் ஒன்று கிடந்ததைக் கண்டாள்.

ஹிரண்மயிக்குப் படிக்கத் தெரியும். அதில் முதலிலேயே தன் பெயர் இருந்ததைக் கண்டு ஆச்சரியமடைந்தாள். அந்தப் பாதிக் கடிதத்தைப் படித்ததில் அவளுக்கு ஒன்றும் அர்த்தமாகவில்லை. அது யாருக்கு எழுதின கடிதம் என்று கூடக் கண்டுபிடிக்க முடியவில்லை. ஆனால் அதைப் படித்ததும் அவளுக்கு மனத்தில் ஒரு பீதி உண்டாயிற்று. அதில் பின்வருமாறு இருந்தது.

ஜாதகத்தைப் பார்த்ததில்

ஹிரண்மயியைப் போன்ற தங்கப் பதுமையை

வாகமானால் பயங்கரமான ஆபத்து

நாளடைவில் பரஸ்பரம் சந்திப்பு

ஏதோவொரு பிரமாதமான ஆபத்து வரப்போகிறதென்று ஹிரண்மயி மிகுந்த கலவரம் அடைந்தாள் அந்தக் காகிதத் துண்டைப் பற்றி யாரிடமும் பிரஸ்தாபிக்காமல் அதை ஜாக்கிரதையாகப் பத்திரப்படுத்தி வைத்தாள்.

மூன்றாவது அத்தியாயம்

கண்கட்டின கலியாணம் - மோதிர விந்தை

அந்த இரண்டு வருஷங்களுக்கு மேல் மற்றொரு வருஷமும் கழிந்தது. புரந்தரன் சிங்கள தேசத்திலிருந்து திரும்பி வரும் பேச்சை மட்டும் காணவில்லை. ஆனால் ஹிரண்மயியினுடைய ஹிருதயத்தில மட்டும் முன்போலவே அவனுடைய உருவம் மங்காதிருந்தது. புரந்தரனும் தன்னை மறந்திருக்க மாட்டான் என்பதையும் அவள் ஊகித்தாள். மறந்திருந்தால் அவன் திரும்பி வந்திருப்பானே!

இந்த மாதிரி மூன்று வருஷங்கள் கழிந்த பிறகு ஒரு நாள் தனதாஸர் திடீரென்று "கிளம்புங்கள்; நாம் எல்லோரும் காசிக்குப் போக வேண்டும். குருதேவரிடமிருந்து அவருடைய சிஷ்யர் வந்திருக்கிறார். நாம் அவரிடம் போக அனுமதி அளித்திருக்கிறார். அங்கேதான் ஹிரண்மயியினுடைய விவாகம் நடக்க வேண்டும். அவர் அங்கேயே ஒரு வரன் தீர்மானித்து வைத்திருக்கிறார்" என்றார்.

தனதாஸர் மனைவி மக்களுடன் காசிக்குப் பிரயாணம் ஆனார். அங்கே போய்ச் சேர்ந்ததும் தனதாஸருடைய குரு ஆனந்தஸ்வாமி அவர்களை வந்து சந்தித்து, விவாகம் நிச்சயம் செய்திருக்கிறதாகவும், முகூர்த்தத்திற்கு வேண்டிய ஏற்பாடுகளைச் சாஸ்திரோக்தமாகச் செய்ய வேண்டுமென்றும் சொல்லிவிட்டுப் போனார்.

விவாகத்திற்கு வேண்டிய ஏற்பாடுகள் எல்லாம் முறைப்படியே நடைபெற்றன. ஒன்றே ஒன்று மாத்திரம் நடக்கவில்லை. அதைப்பற்றி விரிவான விளம்பரம் ஒன்றும் இல்லை. தனதாஸருடைய பரிவாரங்களைத் தவிர வேறு யாருக்கும் விவாகம் நெருங்கிவிட்டது என்றே தகவலே தெரியாது. அந்தச் சடங்குகளுக்குத் தேவையான மத சம்பந்தமான ஏற்பாடுகள் மட்டும் நடந்தன.

விவாகத்தன்று மாலையும் நெருங்கிற்று, இரவு, முதல் ஜாமத்திலேயே லக்னம்; ஆனால் வீட்டிலிருந்த மனுஷ்யர்களைத் தவிர வேறு யாரும் தென்படவில்லை. அக்கம்பக்கத்தாரைக் கூடக் காணோம். அதுவரையில் தனதாஸரைத் தவிர, வீட்டில் வேறு யாருக்கும் யார் மாப்பிள்ளை என்று கூடத் தெரியாது; எப்படி இருப்பான் என்றும் தெரியாது. ஆனால் எல்லோருக்கும் ஒரு திருப்தி. ஆனந்தஸ்வாமி வரன் நிச்சயித்திருப்பதால் அவர் நிச்சயமாக நல்ல இடத்தில் சத்பாத்திரமாகத்தான் பார்த்து ஏற்பாடு செய்திருப்பார் என்ற தைரியம் இருந்தது. அவர் ஏன் மாப்பிள்ளை பெயரை இது வரையில் வெளியிடாமல் வைத்திருக்கிறார் என்பதற்கு ஏதாவது காரணமிருக்கும் அவர் மனத்தில் இருப்பதை யார் கண்டார்கள்?

ஓர் அறையில் புரோகிதர் வேண்டிய ஏற்பாடுகளெல்லாம் செய்துவிட்டுத் தனியாக உட்கார்ந்து கொண்டிருந்தார். வெளியே தனதாஸர் தனியாக மாப்பிள்ளையின் வரவை எதிர்பார்த்துக் கொண்டிருந்தார். ஹிரண்மயி மணப் பெண் கோலத்தில் அந்தப்புரத்தில் இருந்தாள். வேறெங்கும் யாரும் காணோம். 'இதென்ன மூடு மந்திரம்? புரந்தரனுடன் எனக்குக் கலியாணம் இல்லையென்றால் இவன் யாராயிருந்தால் என்ன? இவன் என் கணவன் ஆகமாட்டான்!' என்று ஹிரண்மயி தனக்குள் எண்ணிக் கொண்டாள்.

இந்த ஸமயத்தில் தனதாஸர் தம் மகளை அழைத்துக் கொண்டு போக உள்ளே வந்தார். ஆனால் அவளைப் பந்தலுக்கு அழைத்துப் போவதற்கு முன் அவளுடைய இரண்டு கண்களையும் துணியால் கெட்டியாகக் கட்டிவிட்டார்.

"இது என்ன அப்பா?" என்று ஹிரண்மயி கேட்டாள்.

"குருதேவரின் உத்தரவு அப்படி, நீயும் நான் சொல்லுகிறபடிதான் நடக்கவேண்டும். மந்திரங்களை மனத்திற்குள்ளேயே சொல்லிக் கொள்!" என்று தனதாஸர் சொன்னார்.

அதற்குமேல் ஹிரண்மயி ஒன்றும் மறுபேச்சுப் பேசவில்லை. தனதாஸர் அவள் கையைப் பிடித்து அழைத்துக்கொண்டு மணப் பந்தலுக்குப் போனார்.

அங்கே அவளால் பார்க்க முடிந்திருந்தால், மாப்பிள்ளையும் அதேமாதிரி கண் கட்டுண்டு இருந்தார் என்பதைக் கண்டிருப்பாள். அந்த மாதிரி விவாகம் நடந்தது. அந்த இடத்தில் குருதேவர், புரோகிதர், தனதாஸர் இவர்களைத் தவிர வேறு யாரும் இல்லை. பெண், மாப்பிள்ளை இருவருக்கும் கண் கட்டப்பட்டிருந்ததால், "சுப திருஷ்டி" என்ற முகம் பார்த்துக் கொள்ளும் கட்டம் நடைபெறவில்லை.

கலியாணம் ஆனதும் குருதேவர் தம்பதிகளைப் பார்த்துச் சொல்லலானார்; "உங்கள் இருவருக்கும் இப்பொழுது கலியாணம் ஆகிவிட்டது. ஆனால் நீங்கள் ஒருவரை ஒருவர் பார்த்துக் கொள்ளவில்லை. பெண் கலியாணமாகாமல் இருக்கிறாள் என்ற அவதூற்றை நீக்குவதற்காகத்தான் இந்தக் கலியாணம் இந்த ஜன்மத்தில் நீங்கள் ஒருவரை ஒருவர் சந்திப்பீர்களோ என்னவோ எனக்குத் தெரியாது. சந்தித்தால் யார் யார் என்று

கண்டுகொள்ள உங்களால் முடியாது. அடையாளம் கண்டுகொள்வதற்காக மாத்திரம் நான் ஓர் உபாயம் செய்திருக்கிறேன். என் கையில் இரண்டு மோதிரங்கள் இருக்கின்றன. இரண்டும் ஒரே மாதிரியானவை. அவைகள் கட்டியிருக்கும் மாதிரியே வேறு எங்கும் கிடையாது. மோதிரங்களின் உள்பக்கம் ஒரு மயில் சித்திரிக்கப்பட்டிருக்கிறது. இவைகளில் ஒன்றை மாப்பிள்ளைக்குக் கொடுக்கிறேன், ஒன்றைப் பெண்ணுக்குக் கொடுக்கிறேன்; இந்த மாதிரி மோதிரம் வேறெங்கும் கிடைக்காது; அதிலும் இந்த மயில் மாதிரி யாராலும் சித்திரிக்க முடியாது. நான் என் கைப்பட அவைகளைத் தயாரித்தேன்.

இந்தப் பெண், யார் கையில் இந்த மாதிரி மோதிரத்தைக் கண்டாலும் அவனைத் தன் புருஷன் என்று கண்டுகொள்ளலாம். மாப்பிள்ளை எந்தப் பெண் பிள்ளையின் கையிலாவது இந்த மோதிரத்தைக் கண்டால் அவள் தன்னுடைய மனைவி என்று தீர்மானித்துக் கொள்ளலாம். மோதிரங்களைக் கெட்டுப்போக்கிவிடாமல் ஜாக்கிரதையாக வைத்துக்கொள்ளுங்கள்; யாருக்கும் கொடுக்காதீர்கள். வயிற்றிற்குச் சோறு இல்லாவிட்டாலும் அதை விற்கக் கூடாது. மேலும், இன்னும் இன்று முதல் ஐந்து வருஷம் முடிய, நீங்கள் இந்த மோதிரங்களைப் போட்டுக் கொள்ளக்கூடாதென்பது என் கட்டளை. இன்று ஆடி மாஸம், சுக்ல பக்ஷத்துப் பஞ்சமி, இரவு பதினொரு நாழிகை. இதற்குமேல் இன்னும் ஐந்து ஆடி மாஸத்துச் சுக்ல பக்ஷம் பஞ்சமி இரவு பதினொரு நாழிகை முடிய நீங்கள் இந்த மோதிரங்களைப் போட்டுக் கொள்ளக்கூடாது. என் கட்டளையை மீறினால் மகத்தான ஆபத்து நேரும்" என்று அவர் கூறி முடித்தார்.

இவ்வாறு கூறிவிட்டு ஆனந்தஸ்வாமி விடைபெற்றுக் கொண்டு போய்விட்டார். தனதாஸர் பெண்ணின் கண்கட்டை அவிழ்த்தார். வீட்டில் தந்தையாரும் புரோகிதரும் மட்டும் இருப்பதை ஹிரண்மயி கண்டாள் கணவனைக் காணவில்லை! மண இரவை அவள் தனியாகவே கழித்தாள்.

## நான்காம் அத்தியாயம்

## ஹிரண்மயியின் வறுமை

கலியாணமானதும் தனதாஸர் தம் மனைவியையும் மகளையும் கூட்டிக்கெண்டு ஊருக்குத் திரும்பினார்.

புரந்தரன் சென்றவன் திரும்பி வரவேயில்லை. ஹிரண்மயி சம்பந்தப்பட்ட மட்டில் புரந்தரன் திரும்பி வந்தால்தான் என்ன? வராவிட்டால் தான் என்ன?

புரந்தரன் ஏழு வருஷங்களாகியும் திரும்பி வரவில்லை என்பதை எண்ணினால் ஹிரண்மயிக்குத் துக்கம் வரும்.

"இன்னுமா அவன் என்னை மறக்க முடியாமல், திரும்பி வராமல் இருக்கிறான்? அப்படி ஒருகாலும் இருக்கமுடியாது! அவன் உயிரோடு இருக்கிறானோ இல்லையோ, யார் கண்டார்கள்? அவனைப் பார்க்க வேண்டுமென்று நான் எண்ணுவது பிசகு. நான் பிறகு ஒருவன் மனைவி; ஆனால், என் குழந்தைப் பருவத்துச் சிநேகிதனல்லவா அவன்? அவனைத் திரும்பிப் பார்க்க ஆசைப்படுவதில் பிசகு என்ன இருக்கிறது?"

இந்த மாதிரி எண்ணி அவள் ஏங்குவாள். தனதாஸர் இந்தச் சமயத்தில் மனோவியாகூலத்தால் பீடிக்கப்பட்டு உட்கார்ந்து போனார்; அந்த வியாகூலம் அதிகமாகவே, கொடும் வியாதிக்குள்ளானார். அதனாலேயே மரணமடைந்தார். அவருடைய மனைவி உடன் கட்டையேறிவிட்டாள். ஹிரண்மயிக்கு வேறு யாரும் துணை இல்லை. ஆகையால் ஹிரண்மயிதான் தாயின் காலைப் பிடித்துக் கொண்டு "நீ சாகாதே அம்மா!" என்று எவ்வளவோ அழுது பார்த்தாள். ஆனால் அவளுடைய தாய் சம்மதப்படவில்லை. அது முதல் ஹிரண்மயி பூமியில் ஒன்றியானாள்.

சாகிற பொழுது அவளுடைய தாய், "குழந்தாய்! உனக்கு ஒரு கவலையும் வேண்டியதில்லை. உன்னைக் கலியாணம் பண்ணிக்கொண்ட புருஷன் ஒருவன் கட்டாயம் இருந்து தான் ஆகவேண்டும் விதியால் நியமிக்கப்பட்ட காலம் வரும்போது நீ கட்டாயம் அவனுடன் சேர்வாய். ஒரு வேளை அப்படி ஏற்படாவிட்டாலும் நீ சிறு பெண்ணல்ல. பூமியில் இருப்பதற்கு முதலாவதான உதவி பணம்; அது உனக்கு யதேஷ்டமாக இருக்கிறது" என்றாள்.

ஆனால் அந்த ஆசை மண்ணாயிற்று. தனதாஸருடைய மரணத்திற்குப் பிறகு கணக்குப் பார்த்ததில், அவர் ஒன்றும் சொத்து வைத்து விட்டுப் போகவில்லையென்று தெரிந்தது. வீடு, நகைகள், வீட்டுச் சாமான்கள் இவைகளைத் தவிர வேறொன்றும் இல்லை. வெகு நாளாகவே வியாபாரத்தில் நஷ்டம் ஏற்பட்டுத் தனதாஸர் தவித்துக் கொண்டிருந்ததாகத் தெரிந்தது. அதை அவர் யாரிடமும் வெளியிடவில்லை; நஷ்டத்தை ஈடுசெய்ய மிகவும் சிரமப்பட்டுக் கொண்டு இருந்திருக்கிறார். அதுதான் அவருடைய கவலைக்குக் காரணம். கடைசியாகத் தொல்லையிலிருந்து மீளுவது அசாத்தியமாகிவிட்டது. அதனாலேயே ஏக்கம் பிடித்து தனதாஸர் மரணமடைந்தார்.

இந்த விஷயங்களையெல்லாம் கேள்விப்பட்ட சில இதர வியாபாரிகள் ஹிரண்மயியிடம் வந்து "உங்கள் தகப்பனார் எங்களுக்குக் கடன்பட்டுச் செத்துப்போய்விட்டார். எங்கள் கடன்களையெல்லாம் நீங்களே திருப்பிக் கொடுக்க வேண்டும்" என்றார்கள். அவர்கள் சொன்னது உண்மையென்று கண்ட ஹிரண்மயி, தன்னிடமிருந்த எல்லாவற்றையும் விற்று அவர்களுடைய பாக்கிகளைத் தீர்த்தாள். வீடு முதற்கொண்டு விற்பனையாகிவிட்டது.

இந்த மாதிரியாக அன்னவஸ்திரத்திற்கே சிரமப்படும்படியான நிலைமைக்கு வந்துவிட்டாள் ஹிரண்மயி நகரத்தினர் பக்கத்தில் அவள் ஒரு சிறு குடிசையில் தனியாகக் குடியிருக்கலானாள். ஆனந்தஸ்வாமி ஒருவரே அவளுக்குத் துணையானார். ஆனால், அவர் எங்கோ தூரதேசத்தில் இருந்தார். அவரிடம் யாரையாவது அனுப்பலாமென்றால் அவளிடம் யார் இருந்தார்கள்?

## ஐந்தாம் அத்தியாயம்

## புரந்தரன் வருகை

ஹிரண்மயி இள மங்கை; அழகானவள். தனியாக அவள் ஒரு வீட்டில் தூங்குவதென்பது தகுதியானதன்று. அதில் ஆபத்தும் உண்டு; தூஷணைப் பேச்சுக்கும் இடமுண்டு. அமலா என்று ஓர் இடைப்பெண் பக்கத்தில் குடியிருந்தாள். அவள் ஒரு விதவை; அவளுக்கு ஒரு சிறு பையனும் இரு பெண்களும் இருந்தார்கள்; அவள் யௌவனப்பருவம் கடந்தவள். நல்ல நடத்தையுடையவள் என்று அவளை எல்லோரும் சொல்வார்கள். ஆகையால் ஹிரண்மயி இரவில் அவள் வீட்டில் போய்ப் படுத்துக்கொள்வது வழக்கம்.

ஒரு நாள் ஹிரண்மயி வழக்கம்போல் படுத்துக்கொள்ள வந்தாள். அப்பொழுது அமலா, "எட்டு வருஷங்களுக்கு அப்புறம் கடைசியாகப் புரந்தர செட்டியார் திரும்பிவந்துவிட்டாராமே; இது உனக்குத் தெரியுமோ?" என்று கேட்டாள்.

இதைக் கேட்டதும், ஹிரண்மயி முகத்தை மறுபுறம் திருப்பிக் கொண்டாள்; அமலா அவள் கண்ணில் ஜலம் வந்ததைப் பார்க்கவில்லை. வாழ்க்கையில் தனக்கு இருந்த கடைசிப் பற்றும் விட்டுப் போனதாக ஹிரண்மயிக்குத் தோன்றிற்று. புரந்தரன் அவளை மறுந்துவிட்டான். இப்போது புரந்தரன் அவளை மனத்தில் நினைவு வைத்துக் கொண்டிருந்தால் என்ன? இல்லாவிட்டால்தான் என்ன? அதில் என்ன உபயோகம்? ஆனாலும் அவனுடைய அன்பின் நினைவால் தான் அவளுக்கு வாழ்க்கையைக் கடத்த முடிந்தது. அவன் தன்னை மறந்துவிட்டான் என்பதை எண்ணும்போது அவளுடைய மனது தவித்தது.

"ஒரு சமயம் மறக்கவே இல்லையோ என்னவோ? எவ்வளவு நாள்தான் அன்னிய தேசகத்தில் இருப்பான்? மேலும் அவனுடைய தகப்பனார் இறந்து போய்விட்டார். அவன் இங்கே இருக்காவிட்டால் என்ன நடக்கும்?" என்று ஒரு தடவை எண்ணுவாள். மறுபடியும், "நான் வியபிசாரி; இதில் சந்தேகமில்லை. இல்லாவிட்டால் புரந்தரன் நினைவு எனக்கு ஏன் வருகிறது?" என்று எண்ணுவாள்.

"புரந்தரன் யார் என்று உனக்குத் தெரியாதா? சசீசுத செட்டியாரின் குமாரர்!" என்று அமலா கேட்டாள்.

"ஞாபகம் இருக்கிறது" என்று ஹிரண்மயி சொன்னாள்.

"அவர் திரும்பி வந்திருக்கிறார். எவ்வளவோ கப்பல்களிலே பணம் கொண்டு வந்திருக்கிறாராம். அவர் கொண்டு வந்திருக்கும் திரவியத்திற்குக் கணக்கே இல்லையாம். அவ்வளவு சொத்து இதுவரையிலும் தாமரலிப்தத்தில் யாருக்குமே இருந்தது கிடையாதாம்" என்றாள் அமலா.

ஹிரண்மயி மனத்தில் சுருக்கென்று ஏதோவொரு வேதனை ஏற்பட்டது. தன்னுடைய தரித்திர தசையையும் நினைத்தாள். முன்னே நினைத்திருந்த சம்பந்தத்தைப் பற்றியும் நினைத்தாள். வறுமையின் கொடுமை தாங்கமுடியாதது அல்லவா? நடக்கிறபடி நடந்திருந்தால் அவ்வளவு சொத்தும் அவளுடையதாக இருக்க வேண்டியதல்லவா? அவள் நிலைமையில் இருக்கும் பெண்களில் இந்த மாதிரி நினைக்காமல் இருப்பவர்கள் வெகு சிலர். கொஞ்ச நேரம் ஹிரண்மயி யோசனையிலாழ்ந்திருந்தாள். பிறகு பேச்சை மாற்றி வேறு விஷயங்களைப் பற்றிப் பிரஸ்தாபிக்கத் தொடங்கினாள்.

கடைசியாகப் படுக்கப் போகிறபோது, "அமலா, அவருக்குக் கலியாணம் ஆகிவிட்டதோ?" என்று கேட்டாள்.

"இல்லை; விவாகம் ஆகவில்லையாம்" என்றாள் அமலா.

ஹிரண்மயி அதைக் கேட்டுப் புலன் இழந்தாள். பிறகு அவர்கள் வேறொன்றும் பேசவில்லை.

## ஆறாம் அத்தியாயம்

## நன்கொடை

ஒரு நாள் அமலா சிரித்த முகத்துடன் ஹிரண்மயியிடம் வந்து வேடிக்கையாக அவளைப் பயமுறுத்திய வண்ணம் "ஓகோ, நீ இப்படியா செய்கிறாய்?" என்றாள்.

"நான் என்ன செய்கிறேன்?" என்று ஹிரண்மயி கொஞ்சம் ஆச்சரியத்துடன் கேட்டாள்.

"என்னிடத்தில் ஏன் நீ இவ்வளவு நாளாகச் சொல்லவே இல்லை!" என்று கேட்டாள் அமலா.

"எதைச் சொல்லவில்லை?"

"புரந்தர செட்டியாருக்கும் உனக்கும் இவ்வளவு நெருங்கிய பழக்கம் உண்டென்று!"

ஹிரண்மயி கொஞ்சம் லஜ்ஜை அடைந்தாள்; "அவர் சிறு வயதில் எங்கள் வீட்டுக்கு அடுத்த வீட்டில் இருந்தார். அதை என்ன சொல்லுகிறது?" என்றாள் பிறகு.

"அடுத்த வீட்டில் குடியிருந்தார் என்றது மட்டுந்தானா? நான் இப்போது உனக்கு என்ன கொண்டு வந்திருக்கிறேன், பார்" என்று சொல்லிக்கொண்டு அமலா ஒரு பெட்டியை வெளியில் எடுத்தாள்.

அதைத் திறந்து அதற்குள்ளிருந்து விலையுயர்ந்த வைர அட்டிகை ஒன்றை வெளியில் எடுத்துக் காட்டினாள். அது மிகவும் பிரகாசமாகவும் அபூர்வமாகவும் இருந்தது. ஹிரண்மயி, செட்டியின் மகள் ஆதலால் அவளுக்கும் அதன் மதிப்பு நன்றாகத் தெரியும். "இது ரொம்ப விலையுயர்ந்ததாயிற்றே! இது எங்கே கிடைத்தது?" என்று கேட்டாள். "புரந்தரர் இதை உனக்குக் கொடுத்தனுப்பியிருக்கிறார். நீ என் வீட்டில் இருக்கிறாய் என்று அறிந்து என்னைக் கூப்பிட்டனுப்பி இதை உன்னிடம் கொடுக்கச் சொல்லிக் கொடுத்தார்".

ஹிரண்மயி பார்த்தாள்: அதைப் பெற்றுக் கொண்டால் தரித்திரம் ஹதம். தனதாஸர் வீட்டில் செல்வாக்காக வளர்ந்த அவளுக்கு வறுமையின் அவஸ்தையைத் தாங்க முடியவில்லை. ஆனால் அதை வாங்கிக் கொள்வது நியாயமா? அவளுடைய மனது ஒரு நிமிஷம் தடுமாறிற்று.

பிறகு ஆழ்ந்த பெருமூச்சுடன், "நான் இதைப் பெற்றுக்கொள்ள மாட்டேன் என்று செட்டியாரிடம் சொல்லிவிடு!" என்றாள்.

அமலா ஆச்சரியமடைந்தாள்; "என்னடி இது? உனக்கு என்ன பைத்தியம் கியித்தியம் பிடித்துவிட்டதா? இல்லாவிட்டால் நான் சொல்லுகிறது உனக்கு நம்பிக்கைப் படவில்லையா?" என்று கேட்டாள்.

"நீ சொல்வதை நான் நம்புகிறேன். எனக்குப் பைத்தியமும் பிடிக்கவில்லை. நான் அதைப் பெற்றுக்கொள்ள மாட்டேன், அவ்வளவுதான்!" என்றாள் ஹிரண்மயி.

அமலா அவளோடு எவ்வளவோ வாதாடிப் பார்த்தாள். அவள் கேட்கவில்லை. ஒரே பிடிவாதமாகப் பெற்றுக்கொள்ள மறுத்துவிட்டாள்.

அதற்கு பிறகு அமலா அந்த வைர அட்டிகையை எடுத்துக் கொண்டு அவ்வூர் அரசனான மத தேவ ராஜாவிடம் சென்றாள். அவனை வணங்கி நகையைக் கொடுத்து. "தாங்கள் இதை எடுத்துக் கொள்ள வேண்டும். இது தங்களுக்கு உகந்த ஆபரணம்" என்றாள்.

ராஜா அதன் அழகைப் பார்த்து ஸந்தோஷமடைந்தான்; அந்த ஹாரத்தை எடுத்துக்கொண்டு அமலாவிற்கு யதேஷ்டமாகப் பணம் கொடுத்தான். ஹிரண்மயிக்கு இந்த விஷயம் தெரியாது.

இது நடந்து சில தினங்களுக்குப் பிறகு புரந்தரனுடைய வேலைக்காரி ஒருத்தி ஹிரண்மயியிடம் வந்தாள்.

"என்யஜமானர் உங்களிடம் ஒரு வேண்டுகோளைச் சொல்லும்படி சொல்லியனுப்பியிருக்கிறார்: நீங்கள் இந்தக் குடிசையில் வசிப்பது அவருக்குத் தாங்க முடியவில்லையாம். நீங்கள் அவருடைய பாலிய சிநேகமாதலால் உங்கள் வீடு அவருடைய வீடு போலவாம். நீங்கள் அவருடைய வீட்டில் வந்து இருக்க வேண்டுமென்று அவர் சொல்லவில்லை. ஆனால் உங்கள் தகப்பனார் வீட்டைக் கடன்காரர்களிடமிருந்து விலை கொடுத்து வாங்கிவிட்டாராம். அதை உங்களுக்கே கொடுக்க விரும்புகிறார். நீங்கள் அங்கே போய் வசிக்க வேண்டுமென்று மிகவும் வற்புறுத்திக் கேட்டுக் கொள்ளுகிறார்" என்றாள் அந்த வேலைக்காரி.

ஹிரண்மயிக்கு அந்த வறுமையின் கொடுமையில் தான் பிறந்து வளர்ந்த வீட்டைவிட்டு விரட்டப்பட்டது மிகவும் தாங்க முடியாததாகவே இருந்தது. தான் சிறுபிள்ளை விளையாட்டு விளையாடின இடத்திலும், தாய் தந்தையருடன் கூடி வசித்த இடத்திலும், அவர்கள் இறந்ததைக் கண்ட இடத்திலும் தான் வசிக்காதது அவளுக்குச்

சகிக்கமாட்டாத் துயரமாகவே இருந்தது. அந்த வீட்டைப் பற்றிப் பேசும்பொழுதே அவளுடைய கண்களில் ஜலம் வந்தது.

அவள் வேலைக்காரியைப் பார்த்து, "நான் உன் யஜமானரின் தானத்தை ஏற்றுக்கொள்வது சரியல்ல. ஆனாலும் என்னால் அந்த வீட்டைப் பற்றிய சபலத்தை அடக்க முடியவில்லை. உன் யஜமானருக்கு ஸர்வ மங்களமும் உண்டாகுக!" என்றாள்.

வேலைக்காரி விடை பெற்றுக்கொண்டு சென்றாள். இது நடத்தபோது அமலா கூட இருந்தாள்.

அவளிடம் ஹிரண்மயி போனாள்: "அமலா, நான் தனியாக அவ்வளவு பெரிய வீட்டில் இருக்க முடியாது. நீயும் வந்து என்னுடன் கூட இருக்கவேண்டும்" என்று அவளைக் கேட்டுக் கொண்டாள்.

அமலா சரியென்று ஒப்புக் கொண்டாள். இருவருமாகச் சென்று தனதாஸரின் பழைய வீட்டில் வசித்து வந்தார்கள்.

அமலா புரந்தரன் வீட்டிற்குப் போய் வருவதை ஹிரண்மயி தடுத்து விட்டாள். அமலா அதற்குப் பிறகு போவதில்லை.

அங்கே போனது முதல் ஹிரண்மயி ஒரு விஷயத்தில் மிகவும் ஆச்சரியம் அடைந்தாள் ஒரு நாள் அமலா, "அம்மா, நீ இனிமேல் குடும்ப நிர்வாகத்தைப் பற்றிக் கவலைப்பட வேண்டியதில்லை. தேக சிரமமும் படவேண்டியதில்லை. எனக்கு ராஜா வீட்டில் வேலை கிடைத்திருக்கிறது. ஆகையால் இனிமேல் பணத்திற்குக் குறைவே கிடையாது. ஆகையால் நானே குடும்ப நிர்வாகத்தைக் கவனித்துக் கொள்கிறேன். ஆனால் நீதான் குடும்பத் தலைவியாக இருக்க வேண்டும்" என்றாள்.

அமலாவின் கையில் பணம் தாராளமாக இருப்பதைக் கண்டு ஹிரண்மயி பலவிதமான சந்தேகங்கள் கொள்ளலானாள்.

## ஏழாம் அத்தியாயம்

## அரசன் முன்னிலை

அந்த அதிசய விவாகம் நடந்த பிறகு ஐந்தாவது வருஷத்து ஆடிமாஸ சுக்கில பக்ஷ பஞ்சமி வந்தது அதை நினைத்துக் கொண்டு, மாலையில் ஹிரண்மயி ஏதோ மெய்ம்மறந்து போய் உட்கார்ந்திருந்தாள்

"குருதேவரின் உத்தரவுப்படி நான் நாளை முதல் இந்த மோதிரத்தைக் கையில் போட்டுக் கொள்ளலாம். ஆனால் போட்டுக்கொண்டு என்ன பயன்? அதை ஏன் போட்டுக் கொள்ள வேண்டும்? ஒருவேளை என் புருஷரைப் பார்க்கலாம். ஆனால் அவரைப் பார்ப்பதில் எனக்கு ஆசை இல்லை. எப்பொழுதும் என்னுடைய மனத்தில் வேறொருவருடைய நினைவல்லவா பதிந்திருக்கிறது? இந்தத் துஷ்ட மனத்தை அடக்கித் தண்டிக்க வேண்டியதுதான் சரி; இல்லாவிட்டால் நல்ல வழியிலிருந்து தவறியவளாவேன்" என்று ஹிரண்மயி தனக்குள்ளே சொல்லிக் கொண்டாள்.

இந்த ஸமயத்தில் அமலா ஆச்சரியத்தால் மெய்ம்மறந்தவளாய் உள்ளே வந்து "ஐயையோ, என்ன செய்கிறது? என்ன ஆகப் போகிறதோ தெரியவில்லையே!" என்றாள்.

"என்ன நேர்ந்துவிட்டது?" என்று ஹிரண்மயி கேட்டாள்.

"உன்னை அரண்மனைக்குக் கூட்டிக் கொண்டு போக அரண்மனையிலிருந்து ஆட்கள் பல்லக்குடன் வந்திருக்கிறார்கள்!"

"பைத்தியம் பிடித்துவிட்டதா உனக்கு! என்னை எதற்காக அரண்மனைக்கு அழைத்துக் கொண்டு போக வருகிறார்கள்?" என்று ஹிரண்மயி சொன்னாள்.

அந்த ஸமயத்தில் அரண்மனைச் சேவகர்கள் உள்ளே நுழைந்தார்கள் ஹிரண்மயிக்கு வந்தனம் செய்துவிட்டு. அவள் தங்களுடன் பல்லக்கில் அரண்மனைக்கு உடனே வரவேண்டுமென்பது அரசர் கட்டளை என்று தெரிவித்தார்கள்.

ஹிரண்மயிக்கு ஒன்றும் விளங்கவில்லை. அவள் ஆச்சரியமடைந்து போனாள். ஆனால் கட்டளையை மீற முடியவில்லை. அது அரசரின் கட்டளையல்லவா? மேலும் மதன தேவராஜாவிடம் செல்வதைப் பற்றி ஸந்தேகம் யாருக்கும் ஏற்படவேண்டியதில்லை. ராஜா பரம தர்மிஷ்டன், ஜிதேந்திரியன் என்று புகழ் பெற்றவன். பெண்களுக்கு அவன் கீழ் யாதோர் அவமரியாதையும் ஏற்படாது.

ஹிரண்மயி அமலாவைப் பார்த்து, "நான் ராஜாவைப் பார்க்கப் போக ஸம்மதிக்கிறேன், நீயும் கூட வா" என்றாள்.

அமலா ஸம்மதித்தாள்.

ஹிரண்மயி பல்லக்கில் ஏறிக்கொண்டாள். மிகுந்த ஆர்ப்பாட்டத்துடன் அரசனின் சன்னிதானத்திற்கு அவள் கொண்டு போகப்பட்டாள். செட்டியாரின் பெண் வந்திருக்கிறாள் என்று ஒரு வேலைக்காரி அரசனுக்குத் தகவல் தெரிவித்தாள். ராஜாவின் உத்தரவின்படி வேலைக்காரி ஹிரண்மயியை அரசனிடம் தனியாக அழைத்துக் கொண்டு போனாள்.

அமலா வெளியே தங்கினாள்.

எட்டாம் அத்தியாயம்

மோதிரங்கள்

ஹிரண்மயி அரசனைக் கண்டு வியப்படைந்து போனாள். வாட்ட சாட்டமான ஆகிருதியையுடைய புருஷன்; விரிந்த மார்பு; நீண்ட கைகள்; விசாலமான நெற்றி; பெரிய கண்கள்; சாந்தமே உருவெடுத்து வந்தது போன்ற தோற்றம். அப்போப்பட்ட அழகு வாய்ந்த புருஷன் ஸ்திரீகளின் கண்ணில் படுவது வெகு துர்லபம். அரசனும் செட்டியாரின் பெண்ணைப் பார்த்து அவளைப் போன்ற பெண் அரண்மனைகளில் கூட இருப்பது அருமை என்று எண்ணினான்.

"நீதான் ஹிரண்மயியா?" என்று அரசன் கேட்டான்.

"நான் தங்கள் அடிமை!" என்றாள் ஹிரண்மயி.

"உன்னை நான் கூப்பிட்டு அனுப்பியதன் காரணத்தைச் சொல்லுகிறேன், கேள். உன் கலியாண சம்பந்தமான விவரங்கள் உனக்கு ஞாபகம் இருக்கின்றனவா?"

"இருக்கின்றன".

"அன்றிரவு ஆனந்த ஸ்வாமி உன்னிடம் கொடுத்தாரே ஒரு மோதிரம், அது உன்னிடம் இருக்கிறதா?"

"மகாராஜா! இருக்கிறது. ஆனால் அதெல்லாம் மிகவும் ரகசியமான சமாசாரம் ஆயிற்றே, அது தங்களுக்கு எப்படித் தெரிய வந்தது?"

அரசன் அவள் கேள்விக்கு ஒன்றும் பதில் சொல்லாமலே, "அந்த மோதிரம் எங்கே? அதை என்னிடம் கொடு!" என்றான்.

அது வீட்டில் இருக்கிறது. ஐந்து வருஷங்கள் முடிய இன்னும் ஒரு யாமம் பாக்கி இருக்கிறது. அது முடிகிறவரையிலே போட்டுக் கொள்ளக் கூடாது என்பது ஆனந்த ஸ்வாமியின் உத்தரவு.

"சரி, அதேமாதிரி மற்றொரு மோதிரத்தை ஆனந்த ஸ்வாமி உன் கணவருக்கும் கொடுத்தாரே, அதை நீ இப்போது அடையாளம் கண்டுபிடிக்க முடியுமா?" என்று அரசன் கேட்டான்.

"இரு மோதிரங்களும் ஒரே மாதிரியானவை; பார்த்தால் நன்றாக அடையாளம் தெரியும்".

அரசன் உத்தரவுப்படி ஒரு வேலைக்காரன் ஒரு தங்கப் பெட்டியைக் கொண்டுவந்தான். அரசன் அதிலிருந்து ஒரு மோதிரத்தை எடுத்து, "பார், இந்த மோதிரம் யாருடையது?" என்று கேட்டான்.

ஹிரண்மயி அந்த மோதிரத்தை விளக்கு வெளிச்சத்தில் நன்றாகப் பார்த்தாள்.

"அரசே, இது என்னுடைய கணவரின் மோதிரமாய்த்தான் இருக்க வேண்டும். என்னிடம் உள்ளதைப்போலவே இது இருக்கிறது. தங்களிடம் இது எப்படி வந்தது?" என்று கேட்டுவிட்டு ஹிரண்மயி சிறிது நேரம் யோசித்தாள்.

சிறிது பொழுது யோசித்துவிட்டு, "பிரபோ! இதிலிருந்து நான் விதவையாகிவிட்டேன் என்று அறிகிறேன். திக்கில்லாமல் பந்துக்களின்றி இறந்த என் கணவருடைய சொத்து, தங்களிடம் வந்து சேர்ந்திருக்கின்ற தென்று தோன்றுகிறது. இல்லாவிட்டால் அவர் உயிருடன் இருந்தால் இப்படி மோதிரத்தைப் பிறரிடம் கொடுக்க மாட்டார்" என்றாள் ஹிரண்மயி கடைசியாக.

அரசன் சிரித்துக்கொண்டே, "என் வார்த்தையை நம்பு. நீ விதவையல்ல!" என்றான்.

"அப்படியானால் என் கணவன் என்னைப் போல மிகவும் தரித்திர தசையில் இருக்க வேண்டும். பணத்தின் பொருட்டு இதை விற்றிருக்க வேண்டும்".

"உன் கணவர் தனவந்தர்".

"அப்படியானால் நீங்கள் ஏதோ ஒரு வகையில் அவரிடமிருந்து இதை அபகரித்திருக்க வேண்டும்".

இந்தத் தைரியமான பேச்சைக் கேட்டு அரசனே ஆச்சரியமடைந்துபோனான்.

"நீ மிகவும் தைரியசாலியாயிருக்கிறாயே! மதனதேவ ராஜாவைத் திருடன் என்று இதுவரையில் யாரும் சொன்னது கிடையாது!"

"பின் இந்த மோதிரம் தங்களுக்கு எப்படிக் கிடைத்தது?"

"ஆனந்தஸ்வாமி, உன் விவாகத்தன்று இரவு இதை என் கையில் போட்டார்!" என்றான் அரசன்.

ஹிரண்மயி வெட்கங்கொண்டு தலைகுனிந்து, "பிரபோ! என்னை மன்னிக்க வேண்டும். நான் அபராதம் செய்துவிட்டேன். நான் முட்டாள். தெரியாமல் கடும் சொற்கள் சொல்லிவிட்டேன்" என்றாள்.

## ஒன்பதாம் அத்தியாயம்

## ஹிரண்மயியின் வெற்றி

தான் அரசனுடைய மனைவி என்பதைக் கேட்டதும் ஹிரண்மயி மிகவும் ஆச்சரியமடைந்தாள் ஆனால் கொஞ்சங்கூட அவளுக்கு அதனால ஸந்தோஷம் உண்டாகவில்லை; அதிக வருத்தத்தையே அடைந்தாள்.

'நான் இந்த நிமிஷம் வரையில் புரந்தரனைப் பார்க்கவில்லை யென்றாலும், பிறனுடைய மனைவியாக இருக்கவில்லை. இப்பொழுது முதல், நான் பிறனுடைய மனைவியாக இருக்க ஆரம்பித்து விட்டேன். ஆனால் நான் என் மனப்பூர்வமாகப் புரந்தரனின் மனைவியே. இந்த ராஜாவின் வீட்டை நான் களங்கப்படுத்தி விட்டேனே, பிறனிடம் மனத்தில் காதல் கொண்டவளல்லவா நான்?'

ஹிரண்மயி இந்த மாதிரி யோசனை செய்து கொண்டு நின்றாள். அப்பொழுது அரசன் பேசலானான்:

"ஹிரண்மயி! நீ என் மகிஷி. ஆனால் நான் உன்னை ஏற்றுக் கொள்ளுவதற்கு முன், நான் உன்னிடம் தெரிந்துகொள்ள வேண்டிய விஷயம் ஒன்று இருக்கிறது. நீ எதற்காக, விலைகொடுக்காமல் புரந்தரனின் வீட்டில் வசித்தாய்?"

ஹிரண்மயி தலை குனிந்து கொண்டாள். அரசன் மறுபடியும், "உன்னுடைய வேலைக்காரி அமலா, எப்பொழுது பார்த்தாலும் அவன் வீட்டிற்குப் போய் வந்துகொண்டே இருந்தாளே; எதற்காக?" என்று கேட்டான்.

ஹிரண்மயி வெட்கம் மேலிட்டுத் தலை குனிந்தவண்ணமே இருந்தாள் இந்த ராஜாவிற்கு எல்லா விஷயங்களும் தெரிந்திருக்கின்றனவே! என்று எண்ணி ஆச்சரியப்பட்டாள்.

அப்பொழுது அரசன், "இன்னொரு பெரிய விஷயம் இருக்கிறது: நீ வேறொருவன் மனைவியாக இருக்கையில் புரந்தரன் கொடுத்த வைர அட்டிகையை ஏன் வாங்கிக் கொண்டாய்?" என்று கேட்டான்.

இந்தத் தடவை ஹிரண்மயி சும்மா இருக்க வில்லை; பதில் சொல்லலானாள்:

"பிரபோ! தாங்கள் எல்லாம் அறிந்தவர்களென்று தெரிகிறது. வைர அட்டிகையை நான் பெற்றுக் கொள்ளவில்லை; திருப்பி அனுப்பி விட்டேன்".

"நீ அதை என்னிடம் விலைக்கு விற்றாய். இதோ இருக்கிறது பார்!" என்று சொல்லிக்கொண்டு அரசன் பெட்டியிலிருந்து அந்த ஹாரத்தை எடுத்துக் காட்டினான். அது தனக்குப் புரந்தரன் அனுப்பியதுதானென்று அடையாளம் கண்டுகொண்டு ஹிரண்மயி ஆச்சரியம் அடைந்தாள்.

"ஸ்வாமி! நானா இந்த ஹாரத்தை நேரில் வந்து தங்களிடம் விற்பனை செய்தேன்?" என்று கேட்டாள் அவள்.

"இல்லை, உன் வேலைக்காரியோ தாதியோ, அந்த அமலா அவள்தான் வந்து விற்றாள். அவளைக் கூப்பிடட்டுமா?" என்றான் அரசன்.

ஹிரண்மயியின் முகத்தில் ஒரு சிறு புன்னகை தோன்றிற்று.

"மன்னிக்க வேண்டும், அவளைக் கூப்பிட வேண்டாம்! நான் விற்பனையை ஒப்புக் கொள்ளுகிறேன்" என்றாள்.

இந்தத் தடவை அரசன் ஆச்சரியம் அடைந்தான்.

"பெண்களின் நடத்தை மனத்திற்கெட்டாததாய் இருக்கிறது. நீ பிறன் மனைவியாய் இருந்துகொண்டு புரந்தரனிடமிருந்து ஏன் இந்த ஹாரத்தைப் பெற்றுக்கொண்டாய்?"

"அன்பின் அடையாளம் என்று பெற்றுக்கொண்டேன்!"

மன்னன் பின்னும் அதிகமாக ஆச்சரியம் அடைந்தான்.

"அது எப்படி? அது எப்படி அன்பாயிருக்கும்?"

"நான் கெட்ட நடத்தையுடையவள். மகாராஜா! நான் தங்களுக்கு ஏற்றவள் அல்ல. நான் வந்தனம் செய்து கேட்டுக் கொள்கிறேன்: எனக்கு விடைகொடுங்கள். என்னை நீங்கள் கலியாணம் செய்துகொண்டதை மறந்துவிடவேண்டும்" என்று சொல்லி ஹிரண்மயி அரசனை வணங்கி விட்டுத் திரும்பிப் போக யத்தனித்தாள்

அந்த ஸமயத்தில் அரசனின் ஆச்சரியமடைந்த முகத்தில் ஒரு மலர்ச்சி ஏற்பட்டது அவன் உரக்கச் சிரிக்க ஆரம்பித்தான். ஹிரண்மயி திரும்பிப் பார்த்தாள்.

"ஹிரண்மயி! நீயே வெற்றி பெற்றாய். நான் தோற்றுப் போனேன்! நீயும் விபசாரி அல்ல; நானும் உன் புருஷனல்லன்!" என்றான் அரசன்.

"அப்படியானால் இதென்ன கதை? எனக்குத் தெரிவிக்க வேண்டும். நான் சாமானியமான ஸ்திரீ. தங்களைப் போன்றவர்களுக்கு என்னிடம் கூட என்ன ரகசிய சம்பந்தம் இருக்கக்கூடும்?"

அரசன் சிரித்துக்கொண்டே, "என்னைப் போன்ற அரசர்களுக்கு இந்த மாதிரி ரகசியங்கள் இருக்கும். உன் கலியாணத்திற்கு முன் உன் நகைப்பெட்டியில் ஒரு பாதிக் கடிதம் இருந்ததே அது எங்கே?" என்று கேட்டான்.

ஹிரண்மயி திகைத்துப் போனாள். அவள் ஆச்சரியம் அளவு கடந்ததாயிற்று; "மகாராஜா! நீங்கள் சர்வக்ஞராயிருக்க வேண்டும். அது வீட்டில் இருக்கிறது" என்று அவள் கூறினாள்.

"நீ மறுபடியும் பல்லக்கில் ஏறிக்கொண்டு வீட்டிற்குப் போய் அந்தப் பாதிக் கடிதத்தைக் கொண்டுவர வேண்டும். நீ வந்தவுடன் உனக்கு எல்லா விஷயத்தையும் சொல்லுகிறேன்" என்றான் அரசன்.

பத்தாம் அத்தியாயம்

சந்திப்பு

அரசனது உத்தரவுப்படி ஹிரண்மயி பல்லக்கில் தன் வீட்டிற்குத் திரும்பிப் போனாள். முன் சொல்லப்பட்ட காகிதத் துண்டைத் தன் பெட்டியிலிருந்து எடுத்துக்கொண்டு மறுபடியும் ராஜ சபைக்கு வந்து சேர்ந்தாள்.

அதைப் பார்த்துவிட்டு அரசன் வேறொரு பாதிக் கடிதத்தைப் பெட்டியிலிருந்து எடுத்து ஹிரண்மயியிடம் கொடுத்து, "இரண்டு துண்டுகளையும் சேர்த்துப் பார்!" என்றான். ஹிரண்மயி இரண்டையும் ஒன்று சேர்த்து வைத்துப் பார்த்தாள். நன்றாகப் பொருந்தியிருந்தது.

"இரண்டையும் அதேமாதிரி வைத்துக் கொண்டு ஒரு கடிதமாக வாசி!" என்றான் அரசன்.

ஹிரண்மயி அவ்விரண்டு துண்டுகளையும் இணைத்துப் பின்வருமாறு படிக்கலானாள்:-

"(ஜாதகத்தைக் கணித்துப் பார்த்ததில்) நீ செய்திருக்கும் யோசனைப்படி இப்பொழுது ஒன்றும் செய்யக் கூடாது. (ஹிரண்மயியைப் போன்ற தங்கப் பதுமையை) ஒருகாலும் நிரந்தரமான விதவை நிலையில் வீழ்த்தக் கூடாது. (அவளுக்கு) விவாகமானால் பயங்கரமான விபத்து நேரும். அவளுக்கு வைதவ்யம் ஏற்பட்டுவிடுமென்று கணனத்தின் மூலம் நிச்சயமாகத் தெரிகிறது. ஆகையால் ஐந்து வருஷங்கள் (வரை இருவரும்) ஒருவரையொருவர் பார்க்காமல் இருந்தால், அப்பொழுது இந்தக் கிரஹத்திலிருந்து (வெளியேறி விட்டால்) அதற்குப் பிறகு பரஸ்பரம் சந்திப்பு ஏற்படும்".

வாசித்து முடிந்ததும் ராஜா, "இந்தக் கடிதம் ஆனந்தஸ்வாமி உன் தகப்பனாருக்கு எழுதினது" என்றான்.

"அது இப்பொழுது அர்த்தமாகிறது. எதற்காக விவாக காலத்தில் எங்கள் கண்கள் கட்டப்பட்டிருந்தன? எதற்காக இந்த விசித்திர விவாகம் இரகசியமாக நடந்தது? எதற்காக ஐந்து வருஷ காலம் மோதிர விஷயம் ஏற்பட்டது? இதெல்லாம் அர்த்தமாகிறது. அதற்கு மேல்தான் ஒன்றும் புரியவில்லை".

"இதுவும் உனக்கு நிச்சயம் தெரியவேண்டும். இந்தக் கடிதம் கிடைத்தவுடனேயே, உன் தகப்பனார் உன்னைப் புரந்தரனுக்குக் கலியாணம் செய்து கொடுப்பதென்று இருந்த சம்பந்தப் பேச்சை நிறுத்திவிட்டார். அதனால் புரந்தரன் மிகவும் வருந்தினான். அந்தத் துக்கத்தில் அவன் சிங்களம் சென்றுவிட்டான்" என்று அரசன் மேலும் சொல்லலானான்:

"ஆனந்தஸ்வாமி வரன் தேடிக் கடைசியாக ஓர் இடத்தைத் தீர்மானித்தார். அந்த ஜாதகத்தைக் கணித்துப் பார்த்து அது நல்ல ஆயுள் பலம் கொண்ட ஜாதகம் என்பதை ஆராய்ந்து கண்டார். ஆனால் இருபத்தெட்டு வயது முடிவதற்கு முன்பு ஒரு கண்டம் இருந்தது. அதற்குள் அந்த வரனுக்குக் கலியாணம் ஆகி மனைவியுடன் கூட இருந்தால் ஐந்து வருஷத்திற்குள் மரணம் ஏற்படும் என்று தெரிந்தது ஆனால் அந்த ஐந்து வருஷமும் எப்படியாவது ஜீவித்திருந்து விட்டால், பிறகு நீண்ட ஆயுளுடையவனாக இருப்பான்" என்று கண்டார்.

"ஆகையால் அவனுக்கு இருபத்து மூன்றாவது வயது ஆகியவுடன் கலியாணம் செய்வதென்று தீர்மானிக்கப்பட்டது. ஆனால் அவ்வளவு நாள் கலியாணம் ஆகாமல் இருந்தால் நீ ஏதாவது கவலை கொள்வாய், அல்லது ரகசியமாக வேறு எவனையாவது கலியாணம் செய்து கொண்டு விடுவாய் என்று எண்ணி உனக்குப் பயம் காட்டுவதற்காக இந்தக் கடிதத் துண்டை உன் நகைப்பெட்டியில் வைத்திருந்தார்கள்".

"அதற்குப் பிறகு கலியாணம் ஆகி ஐந்து வருஷம், புருஷன் பெண்சாதி இருவருக்கும் சந்திப்பு இல்லாமல் இருந்தது. அதற்காக என்ன என்ன ஏற்பாடு நடந்ததென்பதெல்லாம் உனக்குத் தெரியும்".

"சில மாதங்கள் சென்றதும் ஆனந்தஸ்வாமி" இங்கே வந்தார். உன்னுடைய கஷ்ட தசையைப் பற்றி அவர் கேள்விப்பட்டு மிகவும் கிலேசமடைந்தார். அவர் உன்னைப் பார்த்தார்; ஆனால் சந்தித்துப் பேசவில்லை. அவர் என்னிடம் வந்து உன்னுடைய விவாக விருத்தாந்தம் முழுவதையும் விஸ்தாரமாகச் சொன்னார். உன்னுடைய தரித்திர நிலைமையிலிருந்து உன்னை மீட்க வேண்டுமென்று தீர்மானித்தார். 'இப்பொழுது நீங்கள் அவளுக்கு உதவி புரிய வேண்டும்!' என்று என்னிடம் சொன்னார். உன்னுடைய புருஷன் இதே நகரத்தில் வசிப்பதாகவும், நான் இருவருக்கும் சந்திப்பு ஏற்படாமல் பார்த்துக் கொள்ள வேண்டுமென்றும் சொன்னார். உன்னுடைய புருஷனையும் எனக்குப் பரிசயம் செய்து வைத்தார். அதுமுதல் அமலா செலவழித்த பணம் எல்லாம் நான் அனுப்பினது தான். உன் தகப்பனாரின் வீட்டை நான்தான் விலைக்கு வாங்கி உனக்குக் கொடுத்தேன். வைர மாலை நான் அனுப்பினதுதான். அவ்வாறு அனுப்பியது, உன்னைப் பரீக்ஷை செய்வதற்காகவே" என்று சொல்லி முடித்தான் அரசன்.

"அப்படியானால் இந்த மோதிரம் தங்களிடம் எப்படி வந்தது? எதற்காக என்னைத் தங்கள் பத்தினி என்று சொல்லிச்

சங்கடப்படுத்தீர்கள்? புரந்தரன் வீட்டில் வசிக்கிறேன் என்று எதற்காகக் குற்றம் கூறினீர்கள்?" என்று ஹிரண்மயி கேட்டாள்.

"ஆனந்தஸ்வாமியின் உத்தரவு கிடைத்த நிமிஷமே, நான் உனக்கு வேலையாட்களை அமர்த்திவிட்டேன். அன்றே அமலாவின் மூலமாக உனக்கு ஹாரத்தை அனுப்பினேன். இன்றோடு ஐந்து வருஷங்கள் முடிவடைகின்றன என்பதை அறிந்தேன். உடனே உன் புருஷனை வரவழைத்து, 'உன் விவாக விருத்தாந்தம் முழுவதும் எனக்குத் தெரியும். உன் மோதிரத்தை எடுத்துக்கொண்டு இரவு பதினொரு நாழிகைக்கு இங்கே வந்து சேர்: நீ உன் மனைவியைக் காணலாம்' என்று சொன்னேன், 'மகாராஜாவின் உத்தரவிற்கு இரண்டில்லை; ஆனால் அந்தப் பெண்ணைச் சந்திப்பதில் எனக்கு அவ்வளவு ஆர்வம் இல்லை. இல்லாவிட்டால் நல்லது என்றான்' என் உத்தரவுப்படி நட! என்றேன் நான்".

"உன் புருஷன் உத்தரவை ஏற்றுக்கொண்டான். 'ஆனால் அந்தப் பெண் நல்ல நடத்தையுடையவளா என்பதை மாத்திரம் நீங்களே கண்டறிய வேண்டும். கெட்ட நடத்தையுடையவளை நான் அங்கீகரிக்க வேண்டுமென்றால் அது தர்மமாகாது' என்றான். நான், 'உன் மோதிரத்தைக் கொடுத்துவிட்டுப் போ; உன் மனைவியை நான் பரீக்ஷை செய்து கண்டு பிடித்து விடுகிறேன்' என்றேன். அவன் 'இந்த மோதிரத்தை நான் பிறரிடத்தில் கொடுக்கக் கூடாது. ஆனாலும் எனக்கு உங்களிடம் அவநம்பிக்கை இல்லை' என்றான். அந்த மோதிரத்தை வைத்துக் கொண்டுதான் உன்னை இவ்வளவு பரீக்ஷை செய்தேன். நீ இந்தப் பரீக்ஷையில் வெற்றி பெற்று விட்டாய்!"

"அதிலிருந்து எனக்கு ஒன்றும் தெரிய வில்லையே!" என்றாள் ஹிரண்மயி.

இந்த ஸமயத்தில் அரண்மனையில் வாத்திய கோஷம் ஏற்பட்டது.

"இரவின் பதினொராவது நாழிகை முடிந்து விட்டது. பாக்கியைப் பின்னால்தான் உனக்குச் சொல்ல வேண்டும். இப்பொழுது உன் புருஷன் தோன்றுவான். இந்தச் சுபமுகூர்த்தத்தில் அவனைச் சந்தி!" என்றான் அரசன்.

அப்பொழுது பின்புறம் இருந்த அறைக் கதவு திறக்கப்பட்டது. ஓர் உயரமான மனிதன் வந்தான்.

"ஹிரண்மயி! இவன்தான் உன் புருஷன்!" என்றான் அரசன்.

ஹிரண்மயி அவனைப் பார்த்தாள். அவள் தலை சுற்றிற்று. கனவா நினைவா என்று அவளுக்குத் தெரியவில்லை. எதிரே புரந்தரன் நின்றான்!

இருவரும் ஒருவரையொருவர் பார்த்து ஸ்தம்பித்துப் போனார்கள். மூளை சிதறியது போல இருந்தது இருவருக்கும். ஒருவரும் அதை நம்ப முடியவில்லை.

வேந்தன் புரந்தரனைப் பார்த்து, "நண்பா! ஹிரண்மயி உனக்குத் தகுந்த மனைவி; ஸந்தோஷமாக வீட்டிற்கு அழைத்துக் கொண்டு போகலாம். இவள் இப்பொழுதும், என்றும் போல, உன்னிடத்தில் ஈடுபட்டு இருக்கிறாள். நான் வேலைக்காரர்களை வைத்து இரவு பகலாக இவளைக் கவனித்து வந்திருக்கிறேன். இவள் வேறு யாரையும் பற்றி நினைக்கவில்லை. உன் இஷ்டப்படி நான் இவளைப் பரீக்ஷை செய்தேன். நான் இவளுடைய புருஷன் என்று கூடச் சொன்னேன். ராஜ்ய பதவியையும் இச்சிக்காமல் இவள் உன்னிடம் இருந்த பற்றை வெளியிட்டாள். அப்படியில்லையென்றால் நான் சொன்னவுடன், நான் குற்றமற்றவள், என்னை ஏற்றுக்கொள்ளுங்கள் என்று சொல்லியிருப்பாள். இவள் உன்னிடம் உண்மையான பற்று கொள்ளவில்லை என்று அப்பொழுது நினைக்கலாம். ஆனால் ஹிரண்மயி, மகாராஜா! 'நான் கெட்ட நடத்தை யுடைவள்; என்னைத் திரஸ்கரியுங்கள்,' என்றாள்" என்றான்.

பிறகு ஹிரண்மயியைப் பார்த்து, "ஹிரண்மயி! நான் உன் மனது முழுவதையும் நன்றாக அறிந்து விட்டேன். நீ வெகு காலம் சௌக்கியமாக இருக்க வேண்டுமென்று இப்பொழுது ஆசீர்வாதம் செய்கிறேன்" என்றான்.

"மகாராஜா! நான் இன்னும் ஒரு விஷயத்தைச் சொல்ல வேண்டும் இவர் சிங்களம் சென்றிருந்தாரே; காசியில் என்னுடன் எப்படிக் கலியாணம் நடந்தது? இவர் அந்த ஸமயம் சிங்களத்திலிருந்து திரும்பி வந்திருந்தார் என்றால், எனக்கு எப்படித் தெரியாமல் போயிற்று?" என்று ஹிரண்மயி கேட்டாள்.

"ஆனந்தஸ்வாமி விஷயம் முழுவதையும் புரந்தரனின் தகப்பனாருக்குச் சொல்லி ஆள் அனுப்பி இவனைச் சிங்களத்திலிருந்து காசிக்கு வரவழைத்தார். பிறகு இவன் மறுபடியும் சிங்களத்திற்குத் திரும்பிப் போய்விட்டான். தாமரலிப்தத்தில் இல்லை. ஆகையால் இது உனக்குத் தெரியக் காரணம் இல்லை".

கடைசியாகப் புரந்தரன் பேசலானான்:

"மகாராஜாவே! நீங்கள் இவ்விதமாக எனது நீண்ட காலத்து மனோரதத்தை நிறைவேற்றி வைத்து விட்டீர்கள் அதே மாதிரி ஈசுவரன் உங்களுடைய சகல மனோரதங்களையும் பூர்த்தி செய்து வைப்பானாக! இன்று நான் பரம சுகம் பெற்றுவிட்டேன். இப்பேர்ப்பட்ட சுகத்தை உங்கள் ராஜ்யத்தில் வேறெங்கும் யாரும் அடையப்போவதில்லை".